

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்


சோபகிருது - புரட்டாசி | இணைய வழி

2023 - அக்டோபர் | மலர்-1 - இதழ்-2




## அருள்மிகு ஸ்ரீ தேவி, பூதேவி உடனுறை கோவிந்தராஜ பெருமாள்

## தென்சபாநாயகர் கோயில், கோவிலூர்

# திருநெல்லை

இணைய வழி ஆன்மீகத் திங்களிதழ்

சோபகிருது புரட்டாசி

2023–அக்டோபர்

இணையவழி மலர் 1 – இதழ் 2

(தனிச் சுற்றுக்கு மட்டும்)

சிறப்பாசிரியர்

பொற்கிழிக் கவிஞர்

சொ.சொ.மீ. சுந்தரம்

ஆலோசகர்

தமிழாகரர் தெ. முருகசாமி

ஆசிரியர் குழு

வெளியிடுபவர்

சீர் வளர் சீர்

நாராயண ஞான தேசிக சுவாமிகள்

கோவிலூர் மடாலயம்

கோவிலூர் 630 307

மானகிரி (அஞ்சல்)

(வழி) காரைக்குடி

சிவகங்கை மாவட்டம்

 04565–236846

 94433 37011

இணைய அச்சாக்கம்

திரு. கணேஷ்

ஸ்ரீபெரும்புதூர்


# பொருளடக்கம்

பக்கம்



# ஆசியுரை

சீர் வளர் சீர்

**நாராயண ஞான தேசிக சுவாமிகள்**

கோவிலூர் ஆதினகர்த்தர்

# காரைக்கால் அம்மையார் காட்டும் வாழ்வு நெறி

காரைக்கால் அம்மையாரின் வரலாறு நம்மில் பலருக்கும் சுருக்கமாகத் தெரிந்திருக்கும். அவர்கள் வாழ்வும், அவர்களின் அறிவாற்றலும், ஆழ்ந்த பக்தியும் நமக்குப் பெருமளவில் வழிகாட்டத் தக்கவை.

அம்மையார் *143* பாடல்களே பாடினார். ஆனால் பத்து பாடல்கள் கொண்ட பதிக அமைப்பினையும், திருஞான சம்பந்தர் கையாண்ட திருக்கடைக் காப்பையும், அந்தாதியையும், முதலில் பக்தி இலக்கியத்தில் அறிமுகம் செய்தவர் அம்மையார் அவர்களே.

அவர், தான் பயன்படுத்திய சொற்களில் கூட சிக்கனமாக இருந்துள்ளார்.

சிவபிரானிடம் வரம் கேட்கும்போது *பிறவாமை வேண்டும்* என்று இரண்டு சொற்களில் கேட்டு விடுகிறார். இதே வரத்தை பட்டினத்தார். பிறவாதிருக்க வரம் தருதல் வேண்டும் என்று கேட்கிறார்.

*– ஆச்சியின் சிக்கனம் செட்டியாரின் தாராளம்.*

*மீண்டும் பிறப்பு உண்டேல் உன்னை என்றும் மறவாமை வேண்டும் –* இறைவன் நம் வினையை முடித்தாலும் சுந்தரர் அல்லது ஞானசம்பந்தர் போல பிறப்பெடுக்கச் செய்தால் மறவாமை வேண்டும். என்ன கூர்மையான தொலைநோக்கு.

*நான் மகிழ்ந்து பாடி அரவாநீ ஆடும்போதுன் அடியின் கீழ் இருக்க* என்கிறார் முதன் முதலில் நடராசர்

தாண்டவத்தைப் பார்க்கவும், அவ்வாறு ஆடும்போது அருகிருந்து பாடவும் அருள் பெற்றது நம் அம்மையார் தான். வேறு எவரும் அவர் நடனத்தைப் பார்த்ததாக நமக்குத் தெரியவில்லை. வியாக்கிரபாதரும் பதஞ்சலியும் கண்ட நடராச நடனத்திற்கு, எந்த மானிடரும் அருகிருந்து பாடியதாகத் தெரியவில்லை.

## அம்மையாரின் பல்துறை ஞானம்

அம்மையாரின் பாடல்களைக் கொண்டு தான் நடராசர் திருமேனிகள் வடிவமைக்கப் பெற்றன என்று வரலாற்று ஆய்வாளர் திரு கலைக்கோவன் சொல்லுகிறார். இது மிகவும் சரியான கருத்து.

நமக்கு ஒரு நடனக் காட்சியை நேரில் பார்ப்பதைப் போல தோற்றத்தை ஏற்படுத்திய அம்மையின் அவதானிக்கும் திறமையையும் கவனித்ததை தத்ரூபமாக பாடல் வடிவில் கொடுத்ததையும் பார்க்கும்போது அம்மையாருக்குப் பக்தியோடு பல் துறை ஞானங்களும் இருப்பதை உணரமுடிகின்றது.

நகரத்தார்கள், தம் பெண்களுக்கு பல்துறை கல்வி பயில்வித்துள்ளனர் என்பது நம் அம்மையாரின் வரலாற்றின் வாயிலாக நமக்குப் புலப்படுகிறது.

## மண வாழ்வும் நமக்கு அளிக்கும் வழிகாட்டுதலும்

அம்மையாரின் திருமணம் பொருந்தாத திருமணம் என்று சேக்கிழார் சொல்லுகிறார். சேக்கிழார், காரைக்கால் அம்மையாரின் கணவரான பரமதத்தனைப் பற்றி அதிக




செய்திகளைத் தரவில்லை. ஆனால் காரைக்கால் அம்மையாக பின்னாளில் உருவாகப் போகின்ற புனிதவதியாரைப் பற்றிப் பல செய்திகளைச் சொல்லுகிறார்.

அம்மையாரின் திருமணத்தில் குடும்பப் பின்புலம் மட்டுமே பார்க்கப் பட்டதாகத் தெரிகிறது. மணமக்களின் தகுதிகள் ஆராயப்படவில்லை. தம்பதியர் இருவரில் அறிவிலும் பக்தியிலும் மேம்பட்டவர் நம் அம்மையார் தான்.

ஆனாலும் கணவனுடன் இசைவாக குடும்பம் நடத்தியுள்ளார். இருவரில் யார் பெரியவர் என்ற போட்டி வரவில்லை. அவரவருக்கு கருத்து சுதந்திரம் இருந்திருக்கிறது.

அம்மையார் சிவத்தொண்டு செய்வதை கணவன் தடுக்கவில்லை. அதே

போல கணவன் அயல் நாடு சென்று வாணிபம் செய்வதாகப் போன போதும் பல ஆண்டுகள் திரும்பாத போதும் அம்மையார், கணவனைக் குறை கூறவில்லை .

கணவனை, உறவினர் ஒருவர் பாண்டிய நாட்டில் குழந்தையுடன் பார்த்த உடன், அவரிடம் அம்மையைச் சேர்ப்பிப்பது தான் முறை என்று, உறவினர்கள் அம்மையாரை கணவனிடம் அழைத்துச் சென்றது, அக்காலத்தில் இருந்த உறுதியான உறவினர் கட்டமைப்பை வெளிப்படுத்துகிறது.

முற்காலத்தில் கல்வியின் பயன் அறிவு என்பதும், அறிவின் பயன் நல்வாழ்வு என்பதுமாக, இருந்ததால் காரைக்கால் அம்மையை நாம் பெருமையாக நினைவு கூர முடிகிறது.

இப்போது கல்வியின் பயன் வேலை என்பதும், வேலையின் பயன் பொருள் ஈட்டுவது என்பதுமாக, ஆகி விட்ட காரணத்தால், அறம், மனிதாபிமானம், அடக்கம் போன்றவை குறைந்து, ஆணவம் அதிகமாகி விட்டது.

இக்கால இளைஞர்களை விட பெண்கள் நன்றாக படிக்கிறார்கள். தங்களை விட அதிகமாக படித்த ஆண்களை மணம் புரிய விரும்புகிறார்கள். மணவாழ்விற்கும் ஏட்டுக் கல்விக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. அன்பு மட்டுமே மண வாழ்வில் மகிழ்வையும் நிலைத்த தன்மையும் தரும்.

ஆண்கள் நன்றாகவும் அதிகமாகவும் படிக்க வேண்டாம் என்பதல்ல நம் கருத்து. திருமணத்திற்கு இருவரது கல்வியும் அடிப்படை தகுதியாக இருக்கத் தேவை யில்லை.

ஜாதகம் பார்த்து நடைபெற்ற எத்தனையோ திருமணங்கள் முறிந்திருப்பதைக் காணும் போது, இன்னும் ஏன் ஜாதகத்தை அடிப்படையாகக் கொண்டு திருமணம் முடிவு செய்ய வேண்டும்? சற்று சிந்தியுங்கள்.

காரைக்கால் அம்மையாரின் வாழ்வு பல இல்லறக் கடமைகளை நமக்கு எடுத்துரைக்கின்றன.

*1. குழந்தைகள், கல்வியாலும் வேலையாலும் ஆணவம் வராமல் இருக்கும் வளர்ப்பு*

*2. பிறர் சுதந்திரத்தை மதிக்கும் தன்மை* (Giving space to each other)

*3. அன்பு பாராட்டும் இயல்பு*

*4. விருந்தோம்பல்*

இவற்றை ஏற்றுச் செய்யும் குடும்பங்கள் சிறப்புடன் வாழும்.

*சுருக்கமாகச் சொன்னால் காரைக்கால் அம்மையாரைப் போல் இருத்தல்*

இவ்வாறு இருந்தால் திருமண மும் நல்ல முறையில் ஆகும். நடைபெறும் திருமணங்களும் நிலைத்து நிற்கும். மகிழ்வும், அமைதியும், அன்பும் குடும்பங்களில் நிலைத்து நிற்க நமது ஆசிர்வாதங்கள்.

## கோவிலூரின் கதை

# கோவிலூர் ஆண்டவர் திவ்ய வரலாறு

பகுதி-2

### ஞான வாசிட்டம் தந்த ஞானம்

- கனகு
காரைக்குடி



சீர் வளர் சீர் முத்தி ராமலிங்க ஞான தேசிக சுவாமிகள்

**முத்திராமலிங்கர் எனப்படும் கோவிலூர் ஆண்டவர் சீர் வளர் சீர் முத்துராமலிங்க ஞான தேசிகரின் ஞான வாழ்க்கை தொடர்கிறது.**

### முத்திராமலிங்கரின் முத்தி ரேகை

முத்திராமலிங்க ஆண்டவருக்கு மெய்ப்பொருளின் தொடக்கம் பொருள் வைத்த சேரியில் நிகழ்ந்தது. அவர் செல்லப்போகும் ஞான வழியைப் பலரும் முன்னரே அறிந்து ஆண்டவருக்குச் சொல்லி மகிழ்ந்தனர். சிக்கலில் ஆண்டவரின் தந்தையாரின் கீழ் பணிசெய்த சொக்கலிங்கம் பிள்ளை என்பவர் ஆண்டவரின் கைரேகைகளின் குறிப்புகளைப் பார்த்து அவர் ஞான வழி செல்ல வேண்டியவர் என்று வழிகாட்டினார். ஆண்டவர் தட்சிணாமூர்த்தி வடிவம் என்று உணர்ந்தார்.

## வேதாந்தப் பாடம்

பொருள்வைத்த சேரி ஆண்டவர் வாழ்வில் திருப்புமுனையாக அமைந்தது. எத்திசை போவது எனத் தெரியாத கப்பல் ஞானத் திசை போக உகந்த லிங்க ஞான குரு வழிகாட்டினார். தன்னுடனேயே ஆண்டவரை இருக்க வைத்து, அவருக்கு நாளும் ஞான உபதேசங்களைச் சொல்லி வைத்தார். அவரின் நெசவு செய்யும் தறியின்மேல் விரிந்து கிடந்த ஞான வாசிட்டத்தை எடுத்து இதுவே உனக்கான நூல் என்று ஆண்டவருக்கு அவரின் ஞான குரு வழங்கினார். ஞான வாசிட்டம் என்னும் பெரு நூலை ஆண்டவர் வணங்கி வணங்கிப் படித்துப் படித்து மனதில் இருத்தினார்.

## இல்லறமும் கூடியது

உகந்த லிங்க ஞான குருவிடம் ஆண்டவரின் தந்தையார் தன் மகனுக்கு இல்லற பந்தம் ஏற்படுத்த வேண்டும் என்ற வேண்டுகோளை வைத்தார். இல்லற ஞானியாக விளங்கிய உகந்த லிங்கரும் ஆண்டவருக்கு இல்லற பந்தத்தை ஏற்படுத்த மனம் ஒப்பினார். தேவகோட்டையைச் சார்ந்த மீனாட்சி (மீனாம்பிகை) என்ற துணையும் ஆண்டவரின் வாழ்க்கைத் துணையானது. இல்லறமே நல்லறமாக நாளும் வளர்ந்து வந்தது ஆண்டவர் என்னும் ஞான விருட்சம்.

## யோகீஸ்வரரின் ஞான வாக்கு

காரைக்குடி என்னும் ஓங்காரக்குடிக்கு ஒரு நாள் யோகீஸ்வரர் ஒருவர் வந்து மக்களுக்கு ஆசிவழங்கிக்கொண்டிருந்தார். அவர் தன்னுடன் உரையாடும் அளவிற்கு ஞானம் உடைய யாராவது இருந்தால் அவரை அழைத்து வாருங்கள் என்று தன்னைச் சுற்றியிருந்தவர்களிடம் கூறினார். அப்போது ஞானம் மிகுந்தவராக விளங்கிய ஆண்டவரை அறிமுகம் செய்தனர். அந்த யோகீஸ்வரர் ஆண்டவரை அப்படியே தழுவி மகிழ்ந்தார். மேலும் ”இவர் பலரையும் நன்னிலை அடையச் செய்யும் ஞான குருவாக விளங்கக் கூடியவர். வேதாந்தத்தை உபதேசிக்க வந்தவர். இவரை நகரத்தார்களின் ஞான குருவாகக் கொள்ளுங்கள். இதற்கான அடையாளம் இன்னும் சில நாள்களில் தெரியும்” என்றார். இதனைக் கேட்ட மக்கள் அனைவரும் ஆனந்தம் அடைந்து தங்களுக்குத் தேடாமல் கிடைத்த ஞானமுத்து என்று ஆண்டவரை வணங்கி நின்றனர்.

## கொப்புடைய நாயகியின் பாதுகாவல்

ஆண்டவர் திருக்கல்யாணம் முடித்து மீண்டும் தனது தந்தை வாணிபம் செய்து வந்த சிக்கல் என்னும் ஊருக்கு வந்தார். இல்லறத்தையும் நடத்தினார். வேத விழுப்பொருளையும் நாளும் பயின்றார். இவ்வாறு சில நாள்கள் கழிந்தன. ஆண்டவருக்குத் தாங்க முடியாத சுர நோய் வந்தது. ஆண்டவர் துவண்டுபோனார். சுர நோயில் இருந்து எவ்வாறு தப்புவது? என்று வழி தெரியாது நின்றார். அப்போது ஒரு பெண் தானாக வந்து, ஆண்டவரின் அருகில் வந்து தீர்த்தம் ஒன்றை வழங்கினார். அதனை வாங்கிப் பருகிய

அந்த நொடியில் ஆண்டவருக்கு இருந்த சுரநோய் தீர்ந்துபோனது. ஆண்டவர் விழித்துப் பார்க்கிறார். அதுவரை அங்கு நின்றிருந்த பெண் காணாமல் மறைந்து போகிறாள்.

ஆண்டவருக்கு இது அதிசயமாக இருந்தது. வந்தது யார்? என்று எண்ணி எண்ணி ஏங்கினார். கடவுள் பெண்ணா? மானிடப் பெண்ணா என்று ஆண்டவருக்குக் குழப்பம் ஏற்பட்டது. வந்தது காரைக்குடி கொப்புடையம்மை என்று உணர்ந்தார். அவரின் உள்ளம் கொப்புடையம்மையைத் துதித்தது. சம்பந்தருக்கு ஞானப்பால் தந்தாள் உமையம்மை. ஆண்டவருக்கு ஞான தீர்த்தம் அருளினாள் கொப்புடையம்மை. வருத்தப்படுபவருக்கு வந்து நிற்கும் காவல் தெய்வமாகக் கொப்புடையம்மை என்றும் இருந்து, பாதுகாக்கிறாள். ஞானப்பால் உண்ட சம்பந்தர் பாடியதுபோல் ஞான தீர்த்தம் உண்ட ஆண்டவரும் கொப்புடையாளைப் பாடினார்.

ஆலோன் இறந்தும் உமை பாகத் தண்ணல் இறந்தும் கமலமுறை
நாலா நநத் தோன் முடிந்து இறந்தும் நார தாதி யோர் இறந்தும்
காலா திகளும் மொழிந்து இறந்தும் ககனமாதி யழிந்து இறந்து
மாலோ கங்களில் இறந்து நின்றாள் அம்மே கொப்பை யுடையவளே

சந்திரமண்டலம், சிவபெருமான், பிரம்மன், மக்கள், காலம், மண்ணுலகம், மற்ற உலகங்கள் கடந்து நிற்பவள் அன்னை கொப்புடையாள் என்று நம்மைக் கடந்து நம்மைப் பாதுகாப்பதற்காக நிற்பவள் கொப்புடையம்மை என்று மனமுருகிப் பாடினார் ஆண்டவர்.

## மயில் பிடிக்கப் போய் கோயில் பிடித்த கதை

காரைக்குடிக்கும் சிக்கலுக்கும் அவ்வப்போது தொடர்பு ஏற்பட்டுக் கொண்டே இருக்கும். ஆண்டவர் காரைக்குடிக்குச் செல்கிறேன் என்று ஒரு முறை தன் குருவிடம் சொல்லிவிட்டுக் கிளம்பினார். அப்போது குருவின் பத்தினி ”காரைக்குடிக்குச் சென்று, திரும்பி வரும்போது, சில மயில்குஞ்சுகள் கொண்டுவரவேண்டும்” என்றார். அதனை குருவாசகமாக ஏற்று ஆண்டவரும் காரைக்குடிக்கு வந்தார். அவரின் பணிகள் நிறைவடைந்த பின் அவருக்கு, மயில் குஞ்சுகள் பற்றிய நினைவு வந்தது.

காரைக்குடிக்கு அருகில் உள்ள மரங்கள் அடர்ந்த பகுதியான கோவிலூர் அருகில் மயில் குஞ்சுகள் கிடைக்கும் என்று எண்ணி தன் நண்பர் நல்லானுடன் ஆண்டவர் கோவிலூருக்கு வந்தார். வந்த நேரம் நல்ல நேரம். கோவிலூர் தெய்வ வளம் பெறுவதற்கான நேரம் அது. வந்தவர் வேடர்களை அழைத்து ”இரு மயில் குஞ்சுகள் வேண்டும். பிடித்து வாருங்கள்” என்றார். அவ்வேடர்கள் மயில் குஞ்சுகள் பிடிக்கப் போயினர்.

அந்நேரத்தில் அருகில் உள்ள திருக்கோயில் ஆண்டவர் கண்ணில் படுகிறது. வன்னி மரங்கள் சூழ்ந்திருக்க அருள்மிகு கொற்றவாளீசர் , திருநெல்லை அம்மன் வீற்றிருக்கும் புராதன தலம் அது. இருந்தாலும் அக்கோயில் பராமரிப்பு இன்றி இருந்தது.

அப்பனும் அம்மையுமாக வீற்றிருக்கும் அக்கோலம் ஆண்டவரின் மனதில் அழியாக் கோலமானது. நல்லானிடம் நாம் இக்கோயிலுக்கு வாரந்தோறும் வரவேண்டும் என்றார். திங்கள் கிழமையும், வியாழக் கிழமையும் கோயிலுக்கு வந்து தொண்டாற்றுவது என்று இருவரும் முடிவு செய்தனர்.

மயில் குஞ்சுகளை வேடர்கள் பிடித்து வந்தனர். அவற்றைப் பொருள் வைத்த சேரிக்கு அனுப்பி வைத்தார் ஆண்டவர்.

மயில் குஞ்சு பிடிக்கப் போனவர்களைக் கோயில் பிடித்துக் கொண்ட கதை இதுதான். வாரந்தோறும் அருள்மிகு கொற்றவாளீசர், திருநெல்லை அம்மனை இருமுறை ஆண்டவர் சுவாமிகள் வழிபட்டு வந்தார். அவ்வாறு வழிபடும் ஒரு நாளில் மழை மிகுந்தது. ஒதுங்க இடம் இன்றி ஆண்டவனுடன் ஆண்டவரும் ஒடுங்கினார். இருந்தாலும் மழையின் வேகம், பெய்யும் காலம் ஆகியன அதிகமாயின. இரவு முழுவதும் நித்திரை கொள்ளாது யோக நித்திரை செய்து கொண்டிருந்தார் ஆண்டவர்.

விடியலில் அன்னைக்கும் அப்பனுக்கும் இருக்க இடம் நன்மையாய் அமைக்க வேண்டுமென ஆட்களை ஏவினார். பனை ஓலைகள் மாற்றப்பட தயாராக இருந்தன. ஆட்கள் பனையோலையை வேய முற்பட்டனர். அப்பன், அம்மை இருந்த குடிசை சாய்ந்து விழுந்தது. ஆண்டவர் மனதில் இக்கோயில் கற்கோயிலாக வேண்டும் என்ற எண்ணம் தோன்றியது.

## காலடி பற்றிய கதை

ஞான வாசிட்டமும் ஆண்டவரின் மனதிற்குள் நிறைந்து வந்தது. ஒருநாள் இரவில் உகந்த லிங்க ஞானகுரு உறங்கிக் கொண்டிருந்தார். அருகில் அவரின் பாதங்களைப் பார்த்து, பிடித்து ஆசிரியருக்கு அசதி போக்கிக் கொண்டிருந்தார் ஆண்டவர். ஆண்டவரைச் சோதிக்க ஏதேனும் ஒரு பாடலைச் சொல்லுக என்றார் ஆசிரியர்.

குருவின் பெருமையை அறிந்த வண்ணம் ஆண்டவர் வைராக்கிய சதகப் பாடல் ஒன்றைச் சொன்னார்.

"உன்னுமுணர் வுக்குணர் வாயென உண்மை தந்தாய்

மன்னும் சுருதிப் பொருளாய் வழி காட்டி நின்றாய்

பின்னும் குருவாய் அடைந்து உன்னருள் பேண வைத்தாய்

என்னென்றுரைப்பேன் நின் கருணை இருந்தவாறே"

என்ற பாடலைச் சொன்னவுடனேயே மிக மகிழ்ந்தார் உத்தலிங்க ஞான குரு. தக்க சீடன், வேதாந்த தத்துவத்தினை உலகிற்குத் தரும் உத்தமன் இவனன்றோ! என்று, பாராட்டி மிக மகிழ்ந்தார். குருவின் காலடி ஞானத்தின் வாசல்.

## ஞானவாசிட்டம் நிறைவு

ஞானவாசிட்டம் முழுவதையும் கற்றார், உணர்ந்தார்,ஓதினார் ஆண்டவர். ஞானவாசிட்ட நிறைவின் பொருட்டு தன் குருவிற்குப் பலவகை அபிடேகங்கள், அலங்காரங்கள், காணிக்கைகள் செய்து ஞான வாசிட்ட வெற்றியைக் கொண்டாட எண்ணினார் ஆண்டவர். மேலும் குரு காணிக்கையாக தன் குருவின்

குடும்பத்தினர் மங்கலம் பெற பெரும் பொருள் கொடுக்க வேண்டித் தன் தந்தை யிடம் வேண்டுகோள் வைத்தார்.

வேண்டுகோளைக் காதில் வாங்கவே இல்லை ஆண்டவரின் தந்தையார். ஆண்டவர் தன் தந்தையை நோக்கி ‘‘ தங்களுக்குக் காது கேட்காதா! ’’ என்றார்.அந்தச் சொற்கள் தந்தையின் காதுகளில் விழுவதற்குமுன்பு அவரின் காதுகள் கேட்கும் திறனை இழந்துவிட்டன.

தந்தையாருக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. உடனே ஆண்டவரின் குருவினைக் கண்டார். நடந்ததைச் சொன்னார். உகந்த லிங்க ஞானகுரு, ”உன் மகன் ஞானி. ஆண்டவர் தம் கையால் திருநீறு பெற்று உய்க ” என்றார். குருவின் முன்னிலையில் தந்தைக்கு நீறளித்து அவரின் செவிகளில் ஏற்பட்ட பழுதினை நீக்கினார் ஆண்டவர். மேலும் ”இந்நாள் முதல் தன் குருவின் குடும்பத்தைக் காத்துவருக!” என்று திருவாய் மலர்ந்தருளினார். அவ்வாறே தந்தையும் அதுமுதல் குருவின் குடும்பத்திற்கு வேண்டுவன செய்து வந்தார்.

ஆண்டவரின் சொற்கள் பலிக்கும் தன்மை பெற்றன. அவர் தனக்கென வாழாமல் உலக உயிர்கள் நன்மைபெற நலமான சொற்களை, கவிதைகளை, தத்துவ விளக்கங்களை, அரிய நிகழ்வுகளைச் செய்து வந்தார்.

*(வளரும்)*

## எதிர் வரும் முக்கிய நிகழ்வு

16.10.2023ம் தேதி காரைக்கால் அம்மையாரின் மாதாந்திர நட்சத்திரம். அன்று காலை 9 மணிக்கு நம் திருமடத்தில் திரு சபா அருணாசலம் அவர்கள் காரைக்கால் அம்மையாரைப் பற்றி சொற்பொழிவு ஆற்றுவார்கள். அதன் பின்னர் காரைக்கால் அம்மையாரின் பாடல்களை திருச்சி தாயுமானவர் அவர்கள் தலைமையில் காரைக்குடி திருநாவுக்கரசர் இறைபணி மன்ற உறுப்பினர்கள் முற்றும் ஓதுவார்கள். அதன் பின்னர் திருவாசகம் முற்றோதல் நடைபெறும். சிவனடியார்கள் கலந்து கொண்டு இறையருள் பெற வேண்டுகிறோம்.

## காரைக்கால் அம்மையார் பாடல்கள்

காரைக்கால் அம்மையாரின் பாடல்கள் முற்றோதும் நிகழ்ச்சி ஒலிப்பதிவு செய்யப்பட இருக்கிறது. அந்தப் பதிவு தகவல் பென் டிரைவ்களில் பதியப்படும். திருமுறைகள் முற்றோதும் குழுவினர் எங்களைத் தொடர்பு கொண்டால் பென் டிரைவ்-ம் காரைக்கால் அம்மையார் பாடல்கள் கொண்ட புத்தகங்கள் 25 பிரதிகளும் கட்டணமின்றி வழங்கப்படும். தொடர்பு கொள்ள வேண்டிய எண்: 9443335312.

# வைராக்கிய சதக தொடர்

தமிழாகரர் **தெ. முருகசாமி**
(மேனாள் முதல்வர்,
இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

சிவம் தொடர்புடையதைச் சைவம் என்பர். சினன் என்ற சொல்தான் சைனன் ஆகும். விசேடம் என்பது வைசேடம் ஆகும். இப்படியாகத் தமிழ் - வடசொல் கலப்பில் முதலெழுத்து திரியும் என்ற வகையில் வயிரம் என்ற சொல் வைரம் என்பதாய்க் கூறப்படும். இச்சொல் அடிப்படையில் அதற்கான பொருள் நுட்பத்துடன் அமைந்த நூலே வைராக்கிய சதகம் என்னும் வேதாந்த நூலாகும்.

சங்க காலத்தில் ஒரே வழி அறியப்பட்ட சமய உணர்வு, காப்பிய காலத்தில் பரவலானது. அதன் தொடர்ச்சியாக நூல்கள் உருவாகும் போது, புராணக் கூறுடன் கூடியவை போலத் தத்துவக் கருத்துக்கள் அடங்கியவை பல உருவா யின.

அங்ஙனம் உருவாகுங்கால் அந்தந்த மண் மணத்தோடு கூடிய மக்களின் வாழ்க்கைப் பதிவில் தத்துவப் படைப்பு ஓர் இன்றியமையாத இடத்தைப் பிடித்தது.

உலக உயிர்களின் பிரிப்பில் மனித உயிர் மட்டுந்தான் பகுத்தறிவானது. இப்பகுத்தறிவு மற்ற உயிர்களின் பங்களிப்போடு தனித்த மன உணர்வால் உன்னதமாய் அமைந்ததாகும்.

பஞ்சு நூலாகி ஆடையாய் அமைய



**தவத்திரு சாந்தலிங்க சுவாமிகள்**

எவ்வளவோ முயற்சிகள் தேவை. பச்சைக்களி மண், சுட்ட செங்கல்லாகிக் கட்டிடம் அமைய எவ்வளவோ முயற்சிகள் தேவை. அது போலத்தான் மனிதமனம் பக்குவம் படப்பட உண்மையறியும், இதைத்தான் மெய்கண்ட சாத்திரமாம் திருவுந்தியாரில்,

*பழக்கம் தவிரப் பழகுவதன்றி*
*உழப்புவதென் பெண்ணே உந்தீபற*

என்பதாகக் கூறப்பட்டுள்ளது.

இப்பழக்கத்தை மனிதன் தானே பெற்றுவிட முடியாது. பிறரின் துணையும் தேவைப்படும் அளவில் நூலும் நூலை விரித்துரைக்கும் ஆசானும் தேவைப்படுவர். அந்த வகையில் நூல் தோற்றத்திற்கும் ஆசான் தங்கியிருந்து நூல் விரித்துரைப்பதற்குவமான இடமே திருமடம் என்ற வரலாற்று முகிழ்ப்பில் ஆங்காங்கே பற்பல திருமடங்கள் உருவானதில் கோவிலூர் வேதாந்த மடமும் ஒன்றாகும்.

ஐம்புலக் சேட்டைகளால் செயல்படும் மனம் எளிதல் பக்குவப்படாது. இந்திரியப் பகை வெல்லும் வீரமே வீரம் என்பார் நல்லாற்றூர் சிவப்பிரகாச சுவாமிகள் இப்பகை வெல்லல் மனித முயற்சியால் அமைந்தாலும் உபசார வழக்காக இறையருளால் குருவருளால் அமைந்ததாகக் கூறுவதுதான் சமய மொழிப்பாங்காகும். இதற்கான அடிப்படைக் காரணம் யாதெனில் மனத்தின் தன் முனைப்பான ஆணவ உணர்வேயாகும். அதை அடக்கியாளும் எச்சரிக்கை உபதேசமாக நூலும் நூலாசானும் அமைவதால்தான் திருவருளாலும் குருவருளாலும் அமைந்ததாய் அடக்கமாகக் கூறிப் பழகும் முறை உருவானது.

இந்த முறைப்பாடு மேலை நாட்டு மெய்ப் பொருள் உணர்விலும் எதிரொலித்த வகையில் “கடவுளின் உயர்ந்த வேலைப்பாடு நேர்த்தியான மனிதன்” **(An Honest Man is the Noblest Work of God)** என்பதாகப் போப்பாண்டவர் பிரகடனப்படுத்தியதைப் புறந்தள்ள முடியாத தன்றோ!

ஆக கரடுமுரடான கல்லைக் கூர்மைபடுத்தல் போல் கடந்து செல்ல முடியாத மலை உச்சியை அடைய நடந்து செல்ல பாதை அமைத்தல் போல் மனித மனத்தைப் பக்குவப்படுத்த எடுத்துக்கொள்ளும் முயற்சியில் அருளாளர்களின் பங்களிப்பு, தாய் தந்தை போன்றதாம் எனலாம்.

இந்நிலையில் சமயம் வளர்ந்த போக்கில் கண்டறியப்பட்ட ஆறு முடிவுகளைக் (அந்தம்) கண்ட அளவில் சித்தாந்தமும் வேதாந்தமும் முன்னிலை பெற்றன என்கிறார் திருமூலர். சித்தாந்த வேதாந்தம் காட்டும் சிவனையே (2394) என்பது அவர் வாக்கு. மேலும் நாதன் உரையவை நாடில் இரண்டந்தம் (2397) என்றும் கூறுகிறார்.

இவ்விரண்டின் விரிவுகள் பலவாயினும் இவற்றின் சுருக்கமாகக் கூறுகையில் நான் பிரம்மமாக இருக்கிறேன் என்பது வேதாந்தம்.

இதைத்தான் அஹம் ப்ரும்மம் அஸி என்பர். நான் அவன் என்ற கருத்தில் அத்வைதமாய் வேறுபாடற்றதை உணர்த்துவதுவே வேதாந்தம். அதாவது நானே அவன் என்பதாக உணர்வது, அஹம் நான். ப்ரும்மம் பிரம்மமாக. அஸி இருக்கிறேன்.

ஆனால் சித்தாந்தம் அது நீ ஆகிறாய் என்பதாக் கூறும் அது நீ ஆகிறாய் எனும் போது தத் அது, துவம் நீயாக. அஸி ஆகிறாய் என்ற வகையில் அது வேறு நீ வேறு என்பதாக உணரப்பட்டுப் பின்னர் ஐக்கியமாவதாகும். இதைத்தான் தத்துவமசி என்பர்.

இங்ஙனம் இருவேறு நிலையில் உணரப்படும் போது சித்தாந்தத்திற்கும் வேதாந்தத்திற்கும் நூலளவான சிறு

வேறுபாடே உண்டு. வேதாந்தமாம் நானே பிரம்மம் என்பதினும், நான் என் நிலையறிந்து சிவனாகும் போதுதான் சீவன் சிவனாக ஐக்கியப் படும் என்பது சித்தாந்தம். பிரம்மமே சீவன் என்றால் சீவனுக்குள்ள மலம் போகா நிலையில் அவ் ஐக்கியம் சாத்தியப்படுமா என்ற விசாரணையை விரிவாக ஆய்ந்தறிந்து அறுதியிடுவதே ஈண்டுள்ள வைராக்கிய சதகத்தின் வேதாந்த விசாரணையாகும்.

இவ்விரண்டின் ஆராய்ச்சிக்கான நூல்கள் பலவாறாக உள்ள நிலையில் வேதாந்த மடமாம் கோவிலூர் மடத்தில் கற்பிக்கப்படும் 16 வேதாந்த சாத்திர நூல்களுள் வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம் என்ற நூல் கருத்துக்களைத் தொடர்ந்து உணர மூலவராம் முத்து ராமலிங்க ஆண்டவர் தொட்டு 13ஆம் பட்டத்து மெய்யப்ப சுவாமிகள் திருவருள் வரை எண்ணி, 14ஆம் பட்டத்து சீர் வளர்சீர் நாராயண ஞான தேசிக சுவாமிகளை வணங்கித் தொடங்குகிறேன்.

வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம் இவ்விரு நூல்களையும் அருளிச் செய்தவர் பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் ஆவார். சாந்தலிங்கர் வீரசைவத்தினரா யினும் மனத்தின் தத்துவ விசாரணையை விரிவாக வேதாந்த முறையில் ஆய்வதில் வேதாந்த நூல்களாக இரண்டையும் தந்தார்.

வைராக்கிய சதகம் எனும் நூல் 100 பாடல்களைக் கொண்டாலும் நூலின் செம்பாகமாக ஐம்பது ஐம்பது பாடல்கள் சாத்திரம் தோத்திரம் என்ற வகையில் பாடப்பட்டுள்ளன.

நூலின் தொடக்கமாகப்பாடும் விநாயகர் வணக்கப் பாடல்,

*நிம்ப நிழற்களிற் றம்பொன் மலர்ந்தாள்*
*நம்புதும் முத்திநல் இன்பம் வறற்கே*

என்பதாக அமைகிறது.

வேம்படி விநாயகரை வணங்கும் பாடலாக இருப்பதென்பது மனத்தின் கசப்பான எண்ணங்களாம் மாசுகள் நீங்கித் தூய்மையடைதற்கான குறிப்பைத் தருவதாக உள்ளது.

நிம்ப என்பது வேம்பு. வேம்பு என்பது கசப்பு. மனத்தின் கசப்பு யாதெனில் கசடுகளான தீய எண்ணங்கள், அவை நீங்கிய மனத்தை உடைய ஆன்மாவே முத்தி இன்பம் பெறும் என்பது கருத்து.

வேம்பின் கசப்பை மாற்ற முடியாது. அதுபோல் ஆன்மாவின் கசடுகள் குருவின் உபதேசத்தால் நீங்கிய நிலையில் இறையோடு ஐக்கியப்படும். இதுபற்றிய விரிவான விசாரணைகள் மனத்திற்கும் அறிவுக்குமான உரையாடலான நாடக வகையில் இச்சாத்திரத் தொடக்கம் உள்ளதாம் என்க!

இந்த வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம் எனும் இரு நூல்களுக்கும் திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் உரை எழுதியுள்ளார்கள். இவர்கள் சாந்தலிங்கரின் சீடராவார்.

உரையும் பாட்டும் உடையோர் சிலரே எனப் புறநானூறு கூறுவது போலக் கோவிலூர் வேதாந்த மடத்தின் வேதாந்த நூல்கள் உரைவளத்தாலும் பெருமை பெற்றவை என்க.

(தொடரும்)

## கோவிலூர் ஆதீன வெளியீடுகள்
## கோவிலூர் புதையல்கள் - 1

# கோவிலூர் ஆண்டவரின் சுவானுபவ திருவாக்கு நூல் அறிமுக தொடர்ச்சி

- கு. அன்பு மெய்யப்பன்,
உதவிப் பேராசிரியர்,
இராமசாமி தமிழ்க் கல்லூரி,
காரைக்குடி - 3.

கோவிலூர் ஆதீனத்தின் ஞானப் புதையல்களில் ஒன்று சுவானுபவத் திருவாக்கு என்ற நூல். கோவிலூர் ஆண்டவர் இயற்றிய இனிய எளிய தத்துவம் சார்ந்த கவிதைகளின் தொகுப்பு நூல் இதுவாகும். இந்நூலில் வேதாந்த சாரத்தையும், உலகியல் இயல்பினையும் ஆண்டவர் எடுத்துரைக்கின்றார். அவரின் தத்துவ சிந்தனைகள் சிலவற்றை அறிமுகம் செய்கிறது இக்கட்டுரை.

### நிலையாமை

துறவிகளின் இன்றியமையாத தகுதியாகக் கருதப்படுவது நிலையாமைக் கொள்கையைக் கடைபிடிப்பதே. மக்களும் நிலையாமைத் தத்துவத்தை உணர்ந்தால் யான், எனது என்கின்ற எண்ணம் அற்றுப் போய்விடும். சுவானுபவத் திருவாக்கில் நிலையாமை பற்றிய செய்திகள் அதிகமாக இடம்பெற்றுள்ளன.

வாழ்வின் நிறைவு மரணம். மரணம் என்பது அனைவருக்கும் பிறந்த அன்றே உறுதி செய்யப்படுகிறது. அதனை உணர்த்தும் பொருட்டு, ஆண்டவர் “உடலில் உயிரை வைத்துக்கொண்டு நாம்

உ
சிவமயம்

சமிவன க்ஷேத்திர மென்னும்
கோயிலூர்ச் சிவஸ்தலத்தில்
எழுந்தருளியிருந்த

ஸ்ரீலஸ்ரீ
முத்துராமலிங்க ஆண்டவர்
ஞான தேசிக சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

சுவானுபவத்
திருவாக்கு

வாழ்ந்தும் இறந்தும் போகிறோம்" என்று குறிப்பிடுவது சிறப்பு.

*"தீண்டாது இருக்கும் சவம்போ இருக்கும்இத் தேகத்திலே*
*ஆண்டுஆண்டு இருந்தும் அழிந்தோம் அதுதிண்ணம்"(30)*

ஆண்டு, ஆண்டு காலமாக மனித குலம் இருந்தும் அழிந்துதான் போகின்றது. எவ்வுயிரும் நிலைப்பதில்லை என்பதை அழகாக ஆண்டவர் வாக்கு உரைக்கின்றது.

வாழ்வில் நடக்கும் அனைத்தும் கனவே. இவ்வுலகம் நிலையில்லாதது. பிரமமே உண்மை என்பதைக் குறிப்பிட மிக எளிமையான வார்த்தைகளைக் கொண்ட அவரது பாடல்,

*" நிலையாமோ இல்லம் நிலையாமோ செல்வம்*
*நிலையாமோ மைந்தர்மனை நெஞ்சே-நிலையாமோ*
*ஆகம் கரணாதி; அத்தனையும் சொப்பனம் என்று*
*ஏக நினைவாய் இரு. (52)*

என்பதாகும். வீடு, செல்வம், மைந்தர்,மனை எல்லாம் நிலை யில்லாதவை. ஒன்றே பரம்பொருள் என்ற நினைவில் இருந்தால் மற்றவை அனைத்தும் நிலையற்றவை என்பதை உணரமுடியும் என்கிறது இத்திருவாக்கு

## உடற்பற்று நீக்கம்

உடற் பற்றை நீக்க வேண்டும் என்று தன் வாழ்நாள் முழுதும் கூறி வந்ததோடு, அதைத் தன் வாழ்விலும் பின்பற்றி முக்தியடைந்தவர் ஆண்டவர். தனது அனுபவங்களின் வெளிப்பாடான சுபானுபவத் திருவாக்கின் பல இடங்களில், உடலின் நிலையில்லாத் தன்மையை வெளிப்படுத்துகிறார்.

*"இன்னல் உறும் உடல்" (27)*
*"தீண்டாது இருக்கும் சவம்போல் இருக்கும் இத் தேகத்திலே"(30)*
*"இந்த உடற்சுமையை ஏன் சுமந்து நொந்து அலைந்தேன்" (33)*
*"உன் அருளால் இவ்வுடம்பு பின்னப்படுவது என்றோ பேசு (37)*

(பின்னப்படுவது மீண்டும் பிறவாத நிலையை அடைவது)

உடற் பற்றை நீக்க வலியுறுத்திய ஆண்டவர்,ஆசைகளைநீக்கச்சொல்கிறார், பெண்ணாசை வேண்டாம் என்கிறார். அஞ் ஞானத்தை அழிக்க வேண்டும் என்கிறார். ஆசைக்குக் காரணமான மனதை வெல்ல வேண்டுமென்கிறார். மனதின் ஆற்றலை அவர் குறிப்பிடும் போது,

*"சொன்னமலை தூக்கி விடலாம்*
*சுழல்கின்ற உததியும் பருகலாம் வெங்கனல்*
*தொட்டே விழுங்கி விடலாம்*
*உஞ்சல்என உலைகின்ற நெஞ்சமதை ஒருவரும்*
*உழலாது அடக்க அரிதாம்" (70)*

(சொன்ன மலை - இமயமலை, உததி - கடல், வெங்கனல் - நெருப்பு, உஞ்சல் என உலைகின்ற - ஊஞ்சல் போல் நிலையில்லாது அலைகின்ற)

அத்தகைய மனததை அடக்க அருள்புரிவாய் என்று இறைவனை வேண்டுகிறார்.

## அகங்காரம் ஒழி

தான் என்னும் அகங்காரம் வேண்டவே வேண்டாம் என்கிறார். அனைத்தும் அறிந்ததாக ஒருவன் கூறுவானாகில் அவன் மூடனே ஆவான். கல்லானது துருவ நட்சத்திரம் இருக்கும் உயரம் வரைக்கும் எறியப்பட்டாலும் அங்கேயே நின்று விடாது கீழேதான் விழும். அதுபோல வேதம் முழுதையும் ஒருவன் அறிந்திருந்தாலும்

அவனால் பிரம நிலையை அடைய முடியாது. தவத்தைக் கொண்டு உண்மை ஞானத்தைப் பெறவேண்டும் என்கிறார் ஆண்டவர்.

*“இருக்குஆ திகள்தேர்ந்தும் இன்புஉருவாம் தேவி*
*திருப்பாதம் சேரும் திறமாப் பெருக்குஆகச்*
*சொல்லின், எறிகல் துருவனிடம் போயிடினும்*
*அ,ல்லல்அற மாட்டாது அறி”(53)*

என்ற பாடலில் எறியப்படுகின்ற கல் கீழே விழுந்தே ஆக வேண்டும் என்ற நியதியை முன்னிறுத்தி, தவம் மட்டுமே எண்ணியதைப் பெறமுடியும் என்பதைக் காட்டுகிறார் ஆண்டவர். ஆண்டவர் மனதை அடக்கி உலகப் பற்றுகளிலிருந்து, உடல் பற்றிலிருந்து விடுபட்டு, பிரம ஞானத்தைப் பெற வலியுறுத்துகிறார்.

ஆண்டவர் முக்தி அடையும் வழியையும் நமக்குக் காட்டுகிறார். ஒரு பொருளைப் பார்ப்பவன், பார்க்கும் அந்நேரத்தில், அந்தப் பொருளை எப்படிச் செய்வது, அதைப் பார்க்கும் போது மனதில் ஏற்படும் விருப்பு, வெறுப்பு முதலியவற்றைச் சிந்தனையில் மேற்கொள்வான். அதனால் அவன் மனதில் வினையாகிய வாசனை உண்டாகும். அவ்வினையாகிய வாசனை முக்தியடைவதைத் தடுக்கும். அவ்வாசனையை நீக்குவதே முக்தியடையும் வழி என்கிறார். விருப்பு வெறுப்பில்லாத நிலையை அடைவதே முக்தியடையும் வழியாகக் காட்டுகிறார். அதைக் கூறும் ஒப்பற்ற பாடல்,

*“காண்பானும் காண்பவையைக் காணுமிடத்து ஏகமதாய்*
*புண்பனவல் வாதனையும் பூண்டிடுமே வீண்பயிலும்*
*வாசனையை சித்தத்தில் வையாதது முத்தி*
*ஆசுஇல்இதற்கு அர்த்தம் இதே யாம்.”*

என்பதாகும்.

முக்தி அடைந்தால் இறைவனாகலாம் என்கிறார். உலகில் அனைத்தும் ஒன்றே. அனைத்தும் பிரமமே. இறைவனும் மனிதனும் ஒன்றே. உயர்வு தாழ்வு இல்லை என்ற வேதக் கருத்தை புதிய சிந்தனையுடன் கூறுகிறார்.

இறைவனை வணங்கும் மனிதனுக்கும், வணங்கப்படும் இறைவனுக்கும் வேறுபாடு இல்லை. குறை நீங்க வணங்கும் மனிதனிடமும் எவ்விதக் குறையும் இல்லை. இரண்டும் ஒன்றே என்பதை,

*“கும்பிடவோ மேல்இல்லை கும்பிடவோ கீழ்இல்லை*
*கும்பிட்டு நீங்கக் குறையில்லை கும்பிடும்பேர்*
*ஆரோ அறியேன்யான் ஆகாகா ஓகோகோ*
*சீரேதும் இல்லை சிவம்’’ (160)*

என்று அழகாகக் குறிப்பிடுகிறார்.

ஆண்டவரின் அனுபவங்களைக் கேட்பது படிப்பது நமக்கும் சுக அனுபவத்தைத் தரும். மிகப் பெரும் ஞானியான ஆண்டவர் வாழ்ந்த காலத்தில் நாம் வாழவில்லை. அவரின் அனுபவங்களை அறிவது கூட நாம் செய்த புண்ணியம். ஆண்டவரின் எண்ணங்களைச் செயல்படுத்தும் விதமாக அவர் தொடங்கிய கோவிலூர் மடாலயம் செயல்பட்டு வருகிறது. ஆண்டவர் பிறந்த, மிகப் பெரும் பாரம்பரியம் கொண்ட இந்நகரத்தார் குலத்தில் பிறந்த நாம் பெருமை கொள்வதோடு ஆண்டவரின் பொற்பாதங்கள் பணிவோம்.

# “நார்த்தாமலை என்னும் நகரத்தார் மலை”

- பழ.கைலாஷ்



மேலமலை, கோட்டைமலை, கடம்பர் மலை, பறையர் மலை, உவக்கன் மலை, ஆளுருட்டி மலை, பொம்மாடி மலை, மண்மலை, பொன்மலை என்கிற ஒன்பது குன்றுகளை உள்ளடக்கிய மலைத்தொகுப்பு “நார்த்தாமலை” ஆகும். இது புதுக்கோட்டையிலிருந்து பத்தொன்பது கி.மீ. தொலைவில் அமைந்து உள்ளது.

ஸ்ரீ இராமருக்கும் இராவணனுக்கும் நடைபெற்ற, இலங்கைப்போரில் மாண்டுபோன வீரர்களை உயிர்ப்பிக்க வடக்கிலிருந்து சஞ்சீவி மலையை அனுமன் தூக்கி வந்தபொழுது அதிலிருந்து சிதறிய துகள்கள் தான் இக்குன்றுகள் என்று சொல்லப்படுகிறது. மருந்து மலையில் இருந்த மருத்துகள் போல் இம்மலைத் தொகுப்பில் பல அரிய மூலிகைகள் உள்ளன. இதன் காரணமாக மருந்துமலையின் சிதறல்களே இம்மலைத்தொகுப்பு என்பதை



ஏற்றுக்கொள்ள முடிகின்றது.

நார்த்தாமலை, அக்காலத்தில் பெரும் வணிகர்களின் தலைமையிடமாக இருந்துள்ளது. அவர்கள் ஒரு குழுவாக இணைந்து செயல்பட்டுள்ளனர். கி.பி. 910ஆம் நூற்றாண்டுகளிலிருந்து இந்த வணிகக் குழுவினர் உள்நாட்டு, வெளிநாட்டு வாணிபத்தில் ஈடுபட்டிருந்துள்ளனர். இந்த வணிகக் குழுக்கள் கோயில்கள், குளங்கள், வாய்க்கால்கள், ஆகியவற்றின் பராமரிப்பிற்கான மானியங்களைப் பெற்று அவற்றை நிர்வகித்து வந்ததோடு, உள்ளூரில் வரிவசூலித்தல் போன்ற ஊராட்சிப்பணிகளையும் செய்துவந்துள்ளனர், இதுகுறித்த பல கல்வெட்டுகள் இங்கு உள்ளன. இக்குழுவினர் வாழும் இடம் ‘நகரம்‘ என்று அழைக்கப்பட்டுள்ளது. ஆகவே இப்பகுதி நகரத்தார்மலை என்று அழைக்கப்பட்டு பின்னர் நார்த்தாமலை என்று மருவியுள்ளது.

இராஜராஜ சோழன் ஆட்சிக்காலத்தில் ‘தெலுங்குக் குல காலபுரம்’ என்று அம்மன்னனின் பட்டபெயர்களில் ஒன்றால் நார்த்தாமலை அழைக்கப் பட்டிருக்கிறது. தஞ்சை பெரிய கோவில் கட்டுமானத்தில் பயன் படுத்தப்பட்ட கற்கள் அனைத்தும் இங்கிருந்து வெட்டி எடுக்கப்பட்டதாக கருதப்படுகின்றது.

அக்காலத்தில் கொடுங் குற்றம் செய்தோரை இங்குள்ள உயரமான மலையிலிருந்து கீழே உருட்டிவிடப்பட்டு கொல்லப்பட்டதன் காரணமாக ஆளுருட்டி மலை என்று ஒரு குன்று பெயர் பெற்றதாகச் சொல்லப்படுகிறது.

மேலமலை குன்றில், 9ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்ட “விஜயாலய சோழீஸ்வரம்“





கலைப்பாணிகளையும் இங்கு கொண்டு வந்து சேர்த்துள்ளனர். இதன் காரணமாக ‘‘ஸ்பிங்கஸ்’’ இம்மலையில் இடம் பெற்றுள்ளது என்கின்றனர் ஆய்வாளர்கள்.

கடம்பர் மலைக் குன்றின் அடிவாரத்தில் 11ஆம் நூற்றாண்டில் இராஜராஜ சோழன் காலத்தில் கட்டப்பெற்ற கடம்பர் கோவில் என்ற சிவாலயம் உள்ளது, இங்கு இராஜராஜ சோழன் காலம் தொட்டு நகரத்தார் அளித்துவந்த கொடைகள் தொடர்பான பல கல்வெட்டுகள் உள்ளன. இதன் அருகே 13ஆம் நாற்றாண்டில் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் கட்டப்பெற்ற மங்களாம்பிகை அம்மன் கோவிலும், நகரத்தார் வணங்கி வந்த நகரீஸ்வரம் என்ற சிவாலயமும் உள்ளது.

என்னும் கற்கட்டுமான கோயில் உள்ளது. இங்குள்ள கல்வெட்டில் நகரத்தார்கள் விஜயாலய சோழீஸ்வரம் உடைய நாயனாருக்கு வைகாசித்திருவிழா கொண்டாடுவதற்கு கொடையளித்த செய்தி கூறப்படுகிறது. இது நகரத்தார்களின் பழமையைக் காட்டும் கல்வெட்டு ஆகும்.

மேலும் மேலமலை குன்றில் “பழியிலி ஈச்சுரம்“ என்னும் சைவ சமயக் குடைவரையும், “பதினென்பூமி வின்னகரம்“ என்னும் வைணவ சமய குடைவரையும் உள்ளன. இதில் பதினென்பூமி வின்னகரம் என்னும் குடைவரையின் முன்மண்டப மேடையின் மூன்று பக்கங்களிலும் யானைகள், சிங்கங்கள், யாளிகள், என பலவிதமான வியப்புமிகு சிற்பங்கள் எழில் தோற்றத்துடன் காட்சியளிக்கின்றன. அதில் “ஸ்பிங்கஸ்” எனப்படும் சிற்பம் குறிப்பிடத்தக்கது. மனித முகமும், சிங்கத்தின் உடலும் கொண்ட இவ்வுருவம் எகிப்து பாணி சிற்பமாகும். வணிக நிமித்தமாக மேலைநாடுகளுக்குச் சென்று வந்த நகரத்தார்கள் அங்கிருந்த

இவ்வாறு நகரத்தார்களின் மலையாக, நகரத்தார்களின் வரலாற்றுப் பழமையைக் காட்டும் மலையாக நார்த்தாமலை விளங்கி வருகின்றது.

இருப்பினும் நார்த்தாமலை குறித்து இதற்கு முன் நகரத்தாரியல் ஆய்வாளர்கள் யாரும் குறிப்பிடாத காரணத்தால், நார்த்தாமலை வரலாற்றுக்கும் நகரத்தாருக்கும் உள்ள தொடர்பு என்பது ஆய்வுக்குரியதே.

# மலரும், தும்பியும் தேனாகி

முனைவர். **இ.ரே.சந்திரமோகன்,**
முதல்வர்,
நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி,
கோவிலூர் – 630 307

'தமிழ் எங்கள் வாழ்விற்குத் தேன்' என்பார் பாவேந்தர். செந்தமிழே உயிர்த்தேனே என்பார் கவியரசர் முடியரசன். "பூவுக்குள் ஒளிந்திருக்கும் கனிக்கூட்டம் அதிசயம்" என்பார் கவிஞர் வைரமுத்து.

இந்த உலகில் பூக்களின் தோற்றமும், வண்டுகளின் தோற்றமும் சுமார் நூற்று முப்பது மில்லியன் ஆண்டுகளுக்கு முந்தையது என அறிவியலார் கருதுகின்றனர். பூக்களில் உள்ள தேனே வண்டுகளின் வாழ்வியல் களமாகின்றது. தேனும் இதே பழமையை உடையது.

தேனில் இருநூறுக்கும் மேற்பட்ட வகைகள் உள்ளன. தேன் தாவரங்களின் மலர்களில் ஊற்றெடுத்து அம்மலர்களில் வந்தமரும் வண்டுசார் உயிரினங்களின் கலப்பினால் பல வேதியியல் மாற்றங்கள் பெற்று உருவாகின்றது.

பூக்களில் உள்ள தாவரத்தின் இனிப்பான திரவத்தை உறிஞ்சிய தேனீக்கள் தங்கள் உடம்பின் வயிற்றுபகுதியில் ஒரு பையில் சேமித்து, உயர்ந்த மலைமுகத்தில் கூட்டின் அடைகளாக மெழுகுகளை உண்டாக்கி அவற்றில் தேனைச் சேமிக்கின்றன.

தேன் உருவாவதற்கு இனிமையான பல திரவங்கள் தேவை. இவைகளில் தாவரமாகத் தருவது சிறிதளவு. ஆனால் வண்டின் ரீங்கார ஓசைகளினால் இந்த மலர்கள் சொறியும் திரவங்கள் கூடுதல் அளவு கொண்டவைகளாகவும் இனிமை மிகுத்தனவாகவும் உள்ளன என்று ஆய்வுகள் தெரிவிக்கின்றன.

இதற்காகக் கடற்கரையில் அமைந்த ஒருவகை மலர்க் கூட்டங்களில் வண்டுகளின் ரீங்காரத்தை ஒத்த *3000* ஹெர்ட்ஸ் ஒலி அலைகளைப் பயன்படுத்தி இவ்வுண்மையை மெய்பித்து உள்ளனர் அறிவியலார். இந்த உண்மையை அபிராமி பட்டர் "வண்டு கிண்டி வெறித்தேன்" என்பார்.

தன் உள்ளத்தைத் தும்பி இன வண்டாய்க் கொண்டு மணிவாசகர் பாடியது திருக்கோத்தும்பி.

*"பூவேறு கோனும் புரந்தரனும் பொற்பமைந்த*
*நாவேறு செல்வியும் நாரணனும் நான் மறையும்*
*மாவேறு சோதியும் வானவருந் தாமறியாச்*
*சேவேறு சேவடிக்கே சென்றுதாய் கோத்தும்பீ"*

பிரம்மன், நாமகள், நாரணன், நான்மறை, வானவர், சோதிகள் ஆகியன அறியமுடியாத சிவபிரானின் சேவடியை ஏற்றி நீ பாடு என்று அரச இனத்துத் தும்பியைக் கேட்டுக்கொள்கிறார் மாணிக்கவாசகர். தும்பியின் பாடும் இயல்பே நல்ல தேனையும் தருகின்றது. தெய்வ அனுபவத்தையும் தருகிறது. தேன் உருவாக மலர்கள் மட்டும் போதாது. தும்பிகளும் தேவை. அவற்றின் இன்னிசையும் தேவை. மலர், தேன், இன்னிசை இவற்றுடன் தெய்வபக்தியையும் இணைக்கிறது தமிழ்த் திருவாசகம். எனவேதான் திருவாசகம் தேனாகின்றது.

# நடராஜர் தத்துவம்

**வே இராமசாமி,** B.Com., F.C.A.,

கோயம்புத்தூர்

**(சைவ நூல்கள் பலவற்றிலிருந்தும் திரட்டி எழுதியது)**

நடராஜர் தோற்றத்தின் சிறப்புகள் சைவ நூல்கள் பலவற்றில் தத்துவங்களாகவும் கதைகளாகவும் பல்வேறு அம்சங்களுக்கான விளக்கத்துடன் காணப்படுகிறது

நடராஜரின் நடனத்தோற்றம் ஐந்து தொழில்களைக் குறிக்கிறது படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்ற ஐந்து தொழில்களைக் குறிப்பதாகச் சைவ நூல்கள் குறிப்பிடுகின்றன.

உடுக்கை படைத்தலையும், அடைக்கலம் தரும் கை காத்தலையும், தீச்சுவாலை அழித்தலையும், ஊன்றி நிற்கும் இடது கால் மறைத்தலையும் தூக்கிய கால்கள் அருளல் ஆகிய முத்தி நிலையைக் குறிப்பதாகவும் கொள்ளப்படுகின்றது.

ஒற்றைக் காலில் நின்றாடும் போதும் நடராஜரின் தலை சமநிலையில் நேராக நிற்கிறது.

பொன்னம்பலவனின் ஆனந்தத் தாண்டவத்தில் பல திசைகளிலும் பறக்கிறது அவன் கேசம்.

கேசத்தில் ஒரு சீராக முடிச்சுகளைக் காணலாம். அந்த கேச முடிச்சுகளில் கீழே உள்ளவற்றையும் பார்க்கலாம்!

அவற்றில், சேஷநாகம் கால சுழற்சியையும், கபாலம் இவன் ருத்ரன் என்பதையும், கங்கை அவன் வற்றா அருளையும், ஐந்தாம் நாள் பிறைச்சந்திரன் அழிப்பது மட்டுமல்ல, ஆக்கத்திற்கும் இவனே கர்த்தா என்பதையும் குறிக்கின்றன.

பின் இடது கரத்தில் அக்னி, சிவன் சம்ஹார மூர்த்தி என்பதை காட்டுகிறது.

நமசிவாய என்னும் பஞ்சாக்ஷர மந்திரத்தின் (ஐந்தெழுத்து மந்திரம்)

‘ந’

முதல் எழுத்தான ‘ந’ வைக் குறிக்கிறது இந்தக் கரம்.

‘ம’

ஊன்றி நிற்கும் அவனது வலது கால்களோ, ‘ம’ என்ற எழுத்தைக் குறிக்கிறது. மேலும் வலது கால், திரோதண சக்தியைக் காட்டுகிறது. இந்த சக்தியால் தான் மனிதர் உயர் ஞானத்தை தேடலினால் அனுபவ

அறிவாகப் பெறுகிறார்.

வலது காலின் கீழே இருப்பது ‘அபஸ்மாரன்’ எனும் அசுரன் ஆணவத்தினால் மனித மனம் கொள்ளும் இருளைக் குறிக்கிறான். அவனோ நடராஜர் தூக்கிய இடது காலைப் பார்த்து இருக்கிறான் தஞ்சம் வேண்டி.

தூக்கிய இடது கால், ஆணவம் மற்றும் மாயை ஆகியவற்றின் பிடியில் இருந்து விடுபட்டு ஆண்டவனின் அனுக்கிரஹத்தினை அடைந்திட வழி வகை செய்யும்.

‘சி’

பின் வலது கரம், பஞ்சாக்ஷர மந்தரத்தின் அடுத்த எழுத்தான ‘சி’ யை குறிக்கிறது. அந்தக் கையில்தான் உடுக்கை (டமரு) என்னும் ஒலி எழுப்பும் இசைக் கருவி. இந்த உடுக்கையின் ஒலியில் இருந்துதான் ப்ரணவ நாதம் தோன்றியது என்பார்கள்

‘வா’

முன் இடது கரமோ, பஞ்சாக்ஷர மந்தரத்தின் அடுத்த எழுத்தான ‘வா’ வை குறிக்கிறது. இந்தக் கரம் யானையின் துதிக்கைபோல் இருக்க, தூக்கிய இடது காலைப் பாரும் அங்குதான் மாயை அகற்றி அருள் தரும் அனுக்கிரக சக்தி இருக்கிறதென கைகாட்டி சொல்கிறது.

‘ய’

அடுத்தாக, ஆடல் வல்லானனின் முன் வலது கரமோ, அபயம் அளித்து, ‘அஞ் சாதே’ என்று அருளும் காட்சி, பஞ்சாக்ஷர மந்திரத்தின் கடைசி எழுத்தான ‘ய’ வை காட்டுகிறது.

நடராஜரின் திருஉடலில் நாகம் ஒன்று தரித்திருப்பதைப் பார்க்கலாம். இந்த நாகம் சாதாரணமாய் சுருண்டு இருக்கும், யோகத்தினால் எழுப்பினால் உச்சி வரை மேலெழும்பிடும் குண்டலினி சக்தியைக் குறிக்கிறது. அவன் இடையைச் சுற்றி இருக்கும் புலித்தோல், இயற்கையின் சக்தியைக் காட்டுகிறது. அதற்கு சற்று மேலே கட்டியிருக்கும் இடைத்துணியோ அவன் ஆடலில், இடது பக்கமாய் பறந்து கொண்டிருக்கிறது!

பொன்னம்பலம் தன்னில் நின்றாடும் நடன சபேசனை சுற்றி இருக்கும் நெருப்பு வட்டம், அவன் ஞானவெளியில் தாண்டவமாடுவதைக் காட்டுகிறது. ஒவ்வொரு தீஜ்வாலையிலும் மூன்று சிறிய ஜ்வாலைகளைக் காணலாம். அதன் மேலே ‘மகாகாலம்‘. அது, காலத்தின், தொடக்கம், நடப்பு மற்றும் முடிவு தனைக் குறித்திடும். நடராஜர் நின்றாடும் ‘இரட்டைத் தாமரை’ பீடத்தின் பெயர் ‘மஹாம்புஜ பீடம்‘. இந்த பீடத்திலிருந்துதான் அண்ட சராசரமும் விரிவடைகிறது என்கிறார்கள்.

**அட்டைப் படத்திலும், 10ம் பக்கத்திலும் பாடல்கள் இடம் பெற்றிருக்கின்றன. அவற்றைக் கேட்க அந்தப் பக்கங்களில் உள்ள**



**இந்த சின்னத்தை கிளிக் செய்யவும்**

# சாட்சி பூதம்

**தேனம்மை இலக்குமணன்,**
காரைக்குடி

கிருஷ்ணரின் தந்தை வசுதேவரின் சகோதரர் தேவபகாரியின் மகன் உத்தவர். அவர் இளம்பருவத்தில் கிருஷ்ணனுக்குத் தேரோட்டியவர். கிருஷ்ணர் குருக்ஷேத்திர யுத்தம் முடிந்து தன் அவதாரப் பணியும் முடியும் தருவாயில் உத்தவரிடம் ”உங்களுக்கு என்ன வேண்டுமோ கேளுங்கள் நான் அதைத் தரச் சித்தமாய் இருக்கிறேன்.” என்கிறார்.

அதற்கு உத்தவர்” கிருஷ்ணா, நான் கேட்பது தப்பாயிருக்கலாம். ஆனால் என் மனதில் பல்லாண்டுகளாய் ஓடிய விஷயம் இது. இதற்குத் தெளிவுகாணவே உங்களிடம் கேட்கிறேன். நீங்கள் முக்காலமும் அறிந்தவர். சூதாட்டத்தின் மூலம் பாண்டவர்க்குக் கேடு நேரலாம் என்பதை உணர்ந்தும் அவர்களை ஏன் தடுக்கவில்லை?”

இதைக்கேட்டதும் புன்முறுவல் பூத்தார் கிருஷ்ணர். “ உத்தவரே உங்கள் சந்தேகம் நியாயமானதுதான். ஆனால் கௌரவர்களும் பஞ்சபாண்டவர்களும் சூதாடும் போது துரியோதனன் விவேகத்துடன் பகடைகளைத் தன் தாய் மாமா சகுனி உருட்டுவார் எனக் கூறி விட்டுத் தள்ளி அமர்ந்து வேடிக்கைமட்டும் பார்த்தான். ஆனால் தர்மனும் மற்ற பாண்டவர்களும் சூதாடுவது எனக்குத் தெரிந்து விடுமோ என பயப்பட்டு அங்கே நான் வரக்கூடாது என நினைத்தனர். “

“ஒரு மன்னன் சூதாட்டத்துக்கு அழைத்தால் இன்னொரு மன்னன் ஒப்புக்கொண்டு ஆடவேண்டியது மரபு. இதனால் துரியோதனன் அழைத்தபோது தட்டமுடியாமல் பாண்டவர்கள் சூதாடினர். ஆனால் துரியோதனன் சகுனிமேல் வைத்த நம்பிக்கையைப் பாண்டவர்கள் என்மேல் வைக்கவில்லை. மேலும் நான் வரக் கூடாது எனப் ப்ரார்த்தித்தனர். அப்படி இருக்கும்போது நான் அங்கே எப்படிச் செல்வது? நான் பகடையை உருட்டினால் யார் வெல்வார்கள் என்று உலகே அறியுமே”

”’எல்லாம் சரி கிருஷ்ணரே. அவர்கள் தம் தேசம் படை பட்டாளம், ஏன் தம்மையும் தம்மை நம்பி வந்த பாஞ்சாலியையும் பிணை வைத்தனர். அப்போதும் வரவில்லை நீங்கள். ஆனால் பாஞ்சாலிக்கு மான பங்கம் நேரும்போது மட்டும் வந்து காப்பாற்றினீர்கள். ஆண்கள் நிறைந்த சபையில் தனியொரு பெண்ணாகத் தன் மானத்தைக் காக்க அவள் போராடினாள். அப்படிப் பலர் முன்னிலையில் அவள் அவமானப்பட்ட பிறகு வந்து காப்பாற்றி

என்ன புண்ணியம்.?"

"உத்தவரே ஒன்றை நீங்கள் கவனிக்க வேண்டும். பாண்டவர்கள் நான் வரக்கூடாது என்றே நினைத்தனர். அதேபோல் பாஞ் சாலியும் முதலில் தன்னால் தன்னைக் காத்துக் கொள்ள முடியும் என எண்ணினாள். அது முடியாமல் போன பிறகே என்னை அழைத்தாள். அதனால்தான் அங்கே நான் வந்து காப்பாற்றினேன்"

"அப்படியென்றால் யாரும் அழைத்தால்தான் நீ அங்கே வருவாயா? உனக்கே கஷ்டப்படுபவர்களைக் காக்கவேண்டுமென்ற இச்சை இல்லையா? " எனக் கேட்டார் உத்தவர்.

"அவரவர் செய்த பாவபுண்ணியங்களுக்கு ஏற்றபடியே அவரவர்களின் கர்மா அமைகிறது. அதன்படியே அனைத்தும் அவர்களுக்கு நிகழ்கிறது. நான் சாட்சிபூதமாக அனைத்தையும் பார்த்துக் கொண்டிருக்கிறேன்" என்கிறார் கிருஷ்ணர்.

இதைக்கேட்டதும் உத்தவர், " என்னது, சாட்சி பூதமா? அப்படியானால் நாங்கள் தவறு செய்யும்போது தடுக்காமல் பார்த்துக் கொண்டேயிருக்கும் சாட்சி பூதமா?" என்று கேட்டார்.

"இல்லை உத்தவரே. நான் எல்லா இடத்திலும் நீக்கமற நிறைந்திருக்கிறேன். நல்லது நடந்தாலும் அல்லது நடந்தாலும் நான் அதைப் பார்க்கும் சாட்சிபூதமாக இருக்கிறேன். நான் அங்கே மட்டுமல்ல எங்கும் இருக்கிறேன் என்பதை உணர்ந்தால் ஒருவன் தவறே இழைக்க மாட்டானே. அப்படிப் பாண்டவர்களும் எங்கும் நிறைந்திருக்கும் நான் அங்கேயும் நிறைந்திருப்பேன் என்பதை உணர்ந்திருந்தால் என்னைத் தடுத்திருக்க மாட்டார்கள். அந்த சூதாட்டம் நிகழ்ந்திருக்காது. அல்லது நான் பகடை உருட்டியிருந்தால் வென்றிருப்பார்கள். " என்றார் கிருஷ்ணர்.

இதைக் கேட்டதும் மேனி சிலிர்த்துக் கண்கள் கசிந்தன உத்தவருக்கு. உண்மைதான் கிருஷ்ணரே நீங்கள் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கிறீர்கள் என்பதை உணர்ந்தாலே போதும். எந்த இக்கட்டும் நிகழாது " என்று அன்பில் கரைந்தார்.

## அன்னதானத்தின் சிறப்பு

ஏழையின் வயிற்றுக்குச் சோறிட்டால் இறைவனுக்குச் சேரும்!

திருமூலர் புன்னகையுடன், ஆம் குழந்தாய்! கோயிலில் வரைந்து வைக்கப்பட்ட பகவானின் திருவுருவத்தின் முன்னர் நீ படைக்கும் படையல், நடமாடும் கோயில்களான ஊன்உடல்களில் வாழும் நம் இறைவனுக்கு ஒருபோதும் சென்று சேருவதில்லை.

ஆனால், நடமாடும் கோயில்களான ஏழை மனிதர்களின் ஊன்உடல்களில் வாழும் நம் இறைவனுக்கு நீ ஒன்று கொடுத்தாய் என்றால், அது கோயிலில் வரைந்து வைக்கப்பட்ட பகவானிடம் உடனே சென்று சேர்ந்துவிடும்!" என்று அருளினார்.

*படமாடக் கோயில் பகவற்கு ஒன்று ஈயின்*

*நடமாடக் கோயில் நம்பர்க்கு ஆங்கு ஆகா*

*நடமாடக் கோயில் நம்பர்க்கு ஒன்று ஈயில்*

*படமாடக் கோயில் பகவற்கு அது ஆமே*

– திருமந்திரம்

# கோவிலூர் மடாலய நிகழ்வுகள்

## சீர் வளர் சீர் நாச்சியப்ப சுவாமிகள் குருபூஜை விழா

சீர் வளர் சீர் நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகளின் குருபூஜை 23.9.2023 அன்று நடைபெற்றது. முதல் நாள் காரைக்குடி திருநாவுக்கரசர் இறைபணி மன்ற உறுப்பினர்கள் கலந்து கொண்ட திருவாசக முற்றோதலும், குருபூஜை அன்று காலை சுவாமி வேதாந்தானந்தா அவர்கள் தலைமையில் தத்துவ ஞான சபை உறுப்பினர்கள் கலந்து கொண்ட கைவல்ய நவநீதம் முற்றோதலும், அபிடேக, ஆராதனைகளும் மிகச் சிறப்பாக நடைபெற்றன நாச்சியப்ப சுவாமிகள் திருமுறை பாடசாலை முதல்வர் திருத்தணி சுவாமிநாதன் ஓதுவார் தலைமயில் மாணவர்கள் தேவாரம் ஓதினார்கள்.















# திருநெல்லை இணையவழி இதழ் வெளியீடு

அன்றைய தினம் நமது திருநெல்லை இணைய இதழை சீர் வளர் சீர் நாராயண ஞான தேசிக சுவாமிகள் வெளியிட்டார்கள். மடாலய அறங்காவலர் திரு மு.கண்ணப்ப செட்டியார் அவர்களும் சுவாமி வேதாந்தானந்தா அவர்களும் இந்த நிகழ்வில் கலந்து கொண்டார்கள்.



# தென் சபாநாயகர் கோயில் தரிசனம்

வளர்பிறை ஏகாதசியும், புரட்டாசி திருவோணமும் கூடிய விசேட தினமாகிய 23.09.2023 அன்று பள்ளி கொண்ட கோவிந்தராஜப் பெருமாளுக்கு அபிடேக ஆராதனைகள் நடைபெற்றன.

புரட்டாசி மாத வளர்பிறை சதுர்த்தசி தினமாகிய 28.09.2023 அன்று அருள்மிகு சிவகாம சுந்தரி உடனுறை ஸ்ரீ ஆனந்த நடராசப் பெருமானுக்கு தில்லைவாழ் அந்தணர்களால் மகாபிஷேகம் சிறந்த முறையில் நடத்தப் பெற்றது.

ஸ்ரீ விநாயகப் பெருமானுக்கு விநாயக சதுர்த்தி வழிபாடும், ஸ்ரீ ஆறுமுகப் பெருமானுக்கு சஷ்டி அன்று திரிசத வழிபாடும், வழக்கமான பிரதோஷ அஷ்டமி வழிபாடுகளும் சிறப்பாக நடைபெற்றன. அனைத்து வழிபாடுகளிலும் ஏராளமான அன்பர்கள் வந்திருந்து தரிசித்து மகிழ்ந்தனர்.

தனிச் சன்னதி கொண்டுள்ள அருள்மிகு சிவகாமி அம்மனுக்கு புரட்டாசி மாதம் 28ம் தேதி 15.10.2023 தொடங்கும் நவராத்திரி விழாவின் ஒவ்வொரு நாளும் மாலை 6.00 மணி அளவில் சிறப்பு வழிபாடுகள் நடைபெற உள்ளன.

## ஐப்பசி மாத வழிபாட்டு நிகழ்ச்சிகள்:

- ஐப்பசி 5ம் தேதி 22.10.2023 அஷ்டமி – மாலை வைரவர் அபிஷேகம்
- ஐப்பசி 8ம் தேதி 25.10.2023 வளர்பிறை ஏகாதசி – மாலை பெருமாள் அபிஷேகம்
- ஐப்பசி 9ம் தேதி 26.10.2023 – மாலை பிரதோஷ வழிபாடு
- ஐப்பசி 15ம் தேதி 1.11.2023 சங்கடஹர சதுர்த்தி – மாலை விநாயகர் வழிபாடு
- ஐப்பசி 19ம் தேதி 5.11.2023 அஷ்டமி – மாலை வைரவர் வழிபாடு
- ஐப்பசி 24ம் தேதி 10.11.2023 – மாலை பிரதோஷ வழிபாடு

## வழிபாட்டில் பங்குபெற வாய்ப்பு:

நமது தென் சபாநாயகர் கோயிலில் நடைபெறும் வழிபாடுகளில் பங்கு கொள்ள விரும்புபவர்கள் மற்றும் தினசரிக் கட்டளைகள், மாதக் கட்டளைகள், சிறப்பு வழிபாட்டுக் கட்டளைகளில் பங்கு கொள்ள விரும்புபவர்கள் கோயில் அலுவலகத்தையோ அல்லது 9443335312 என்ற எண்ணிற்கோ தொடர்பு கொள்ளலாம். முதலில் வருபவருக்கே முன்னுரிமை என்பதால் உடன் தொடர்பு கொள்ளவும்.

# கோயில்களும் கட்டளைகளும்

கட்டளை என்பது கோயில்களில் நடைபெறும் பல்வேறு வழிபாடுகள், விழாக்களில் பங்கு கொண்டு அவற்றுக்கான நன்கொடை வழங்குவது எனலாம். கலந்து கொள்வது வழிபாடு, பங்கு கொள்வது கட்டளை. அதை நல்ல வாய்ப்பு எனக் கருதி பலர் பங்கு கொள்கின்றனர்.

நமது கோவிலூர் மடாலயத்துக்கும் சிதம்பரம் சபாநாயகர் கோயிலுக்கும் நீண்ட காலத் தொடர்பு உண்டு. அங்கு உபயதாரர்களுக்கு வழங்கப்பட்ட அறைகளில் முதல் அறை நமது திருமடத்துக்குத்தான். சுற்றுப் பிரகாரத்தில் அதைக் காணலாம். பல்வேறு கட்டளைகளில் நமது திருமடம் பங்கு கொள்கிறது. அதில் அன்னப் பாவாடை என்ற கட்டளை சுமார் 150 வருடங்களுக்கு முன் தொடங்கப் பெற்று, இடையில் சிறு இடைவெளி இருந்தாலும் இப்போது 25 வருடங்களாகத் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. உச்சிக்கால நைவேத்தியம், அபிஷேகக் கட்டளை என்று பல கட்டளைகளில் பங்கு கொள்கிறோம்.

அது போல நமது தென்சபாநாயகர் கோயிலிலும் பல தினசரி கட்டளைகள், மாதக் கட்டளைகள், சிறப்புக் கட்டளைகள் என்று தற்போது உபயதாரர்களைச் சேர்க்கும் பணி நடந்து வருகிறது. நம்மவர்கள் பலரும் இவைகளில் உபயதாரர்களாக பங்கு கொண்டு பலன் பெற வேண்டும் என்று விரும்புகிறோம். 9443335312 என்ற எண்ணுக்குத் தொடர்பு கொண்டு விபரங்களை அறியலாம்.

**இந்த இதழ் முழுமையாக மின்னணு இதழாக இருக்கும்.இந்த இதழ் வேண்டுபவர்கள் 9443337011 என்ற தொலைபேசி எண்ணிற்கு புலனத் தொடர்பினைச் (WhatsApp) செய்தால் அவர்கள் இந்த குழுவில் இணைக்கப்படுவார்கள்.**

# சுவாமிகள் கலந்து கொண்ட நிகழ்வுகள்



30.09.2023 அன்று நடைபெற்ற துழாவூர் ஆதீன குருபூஜை மற்றும் திரு சண்முகநாதனுக்கு அறமனச் செம்மல் விருது வழங்கும் விழாவில் மதுரை ஆதீனகர்த்தர், குன்றக்குடி அடிகளார்,துளாவூர் சுவாமிகள் மற்றும் பாதரக்குடி சுவாமிகளுடன் கோவிலூர் சுவாமிகள்.



# 05.10.2023 அன்று திருவண்ணாமலை ஈசானிய ஞான தேசிகர், மாத நட்சத்திர மகேஸ்வர பூஜையில் கோவிலூர் சுவாமிகள்





ஈசானிய ஞான தேசிகர் பெரிய அருளாளர். அவர் திருவண்ணாமலையில் ஜீவ சமாதியாக இருக்கிறார். அந்த சமாதி கோவிலுக்கு நாள்தோறும் பெருந்திரளாக பக்தர்கள் வருகிறார்கள். குறிப்பாக மாதாந்திர மகேஸ்வர பூஜைக்கும் அதிகமாக பக்தர்கள் வருகிறார்கள். மாதந்தோறும் நடைபெறும் மாகேஸ்வர பூஜை இந்த மாதம் சென்னை மேனகா அவர்கள் உபயமாக நடைபெறுகிறது. திருநெல்லை வாசகர்களும் ஈசானிய ஞான தேசிகர் சமாதி கோவிலில் வழிபட்டு அவர் அருள்பெற மிருகசீரிஷ நட்சத்திரத்தன்று ஈசானிய மடத்திற்கு வருமாறு அழைக்கின்றோம். உபயம் செய்ய விரும்பும் பக்தர்கள் திரு பெரிய வள்ளியப்பன் அவர்களை 6381734849 என்ற எண்ணில் தெ ாடர்பு கொள்ளவும்.





05.10.2023 அன்று வடலூரில் வள்ளலார் 200வது திருஅவதார தின நிகழ்ச்சியில் சீர் வளர் சீர் நாராயண ஞான தேசிக சுவாமிகள் கலந்து கொண்டார்கள். அருகில் பத்மஸ்ரீ நர்த்தகி நடராஜ் மற்றும் இந்து சமய அறநிலைய துறை இணை ஆணையர் திரு சிவகுமார் அவர்கள்.



10.10.2023 அன்று அழகப்பா பல்கலைக்கழகம் நடத்திய வீறுகவி முடியரசனார் பன்னாட்டு கருத்தரங்கில் கலந்து கொண்டு வாழ்த்துரை வழங்கினார்கள்.

# மாண்புமிகு அமைச்சர் திரு.பழனிவேல் தியாகராஜன் உடன் கோவிலூர் சுவாமிகள்









01.10.2023 அன்று மாண்புமிகு தமிழக தகவல் தொழில் நுட்ப அமைச்சர் முனைவர் பழனிவேல் தியாகராஜன் அவர்கள் குடும்பத்துடன் நம் திருமடத்திற்கு வந்து ஆண்டவரை தரிசனம் செய்து நம் சுவாமிகளுடன் கலந்துரையாடினார்கள். பின்னர் தென் சபாநாயகர் கோவிலுக்கு சென்று அருள்மிகு சிவகாமி அம்மை உடனுறை அனந்த நடராச பெருமானையும் ஸ்ரீதேவி பூதேவி உடனுறை கோவிந்தராஜ பெருமாளையும் குடும்பத்துடன் தரிசித்தார்.














GANDHIAN INTEGRATED FORUM TEST (GIFT)
MAHATMA GANDHI YOUTH FESTIVAL
Mahatma Gandhi Jayanthi State Level Poetry Competition
Organized jointly in association with
Youth forum for Gandhian Studies
Khadi Gramodyog Bhavan,
Thakkar Bapa Vidyalaya Samithi,
Tamil Nadu Harijan Sevak Sangh,
T.N.Akhil Bharat Rachanatmak Samaj and
Maruthi Agency.
SECOND PRIZE WINNER
Ms.R.S. SHREE MADURA SUBALAKSHMI
Nachiappa Swamigal Arts and Science College,
Sivagangai
2nd Oct. 2023

சென்னையிலுள்ள ஒருங்கினைந்த காந்திய மன்ற அறக்கட்டளை (GIFT) சார்பில் நடைபெற்ற காந்திய இளையோர் திருவிழாவில் நடந்த மாநில அளவிலான கவிதைப் போட்டியில் இரண்டாவது பரிசு பெற்றுள்ளார்.

நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியில், இளங்கலை இரண்டாமாண்டு ஆங்கில இலக்கியம் பயிலும் ரா.சி.ஸ்ரீமதுரா சுபலெட்சுமி என்ற மாணவி, மாநில அளவிலான கவிதைப் போட்டியில் இரண்டாம் பரிசு பெற்றார் பரிசினை அவர் 02/10/2023 அன்று சென்னையில், மாண்புமிகு தமிழக ஆளுநர் ஆர்.என்.ரவி அவர்களிடம் பெற்றார்.

திருநெல்லை இதழ் வாழ்த்தி மகிழ்கிறது.






Environmental Information, Awareness, Capacity building and livelihood Programme (EIACP) PC – RP

"Microorganisms and Impact on Public Health"

Ministry of Environment Forest & Climate change (MoEF & CC), Government of India, New Delhi

Department of Zoology, University of Madras, Guindy Campus, Chennai 600 025

Jointly Organized by

Yatha Green Council of India (YGC India)

Winner Certificate

This is to Certify that Mr./Ms. M. Pothigai Bharathi, Nachiappa Swamigal Arts & Science College, Koviloor has won First Prize in Short Film Competition in the event of "Plant Your Talent" held at Prasad Studio, Saligramam, Chennai – 600 093 on 05.10.2023.

DHINAAKAR
Founder
YGC India

Prof. Dr. C. ARULVASU
Coordinator
DZUM EIACP PC - RP

மத்திய அரசின் சுற்றுச்சூழல் பாதுகாப்பு அமைச்சகமும், சென்னைப் பல்கலைக்கழகமும் இணைந்து நடத்திய "நுண்ணுயிரிகளும் பொது சுகாதாரத்தில் அவற்றின் தாக்கமும்" என்ற தலைப்பில் 5.10.2023 அன்று நடத்திய குறும்படப் போட்டியில் நமது நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி, காட்சிவழித் தொடர்பியல் (Visual Communication) மாணவர்கள் **முதல் பரிசு** வென்றார்கள்.

அவர்களையும், ஆசிரியர்களையும் நமது கோவிலூர் மடாலயமும், திருநெல்லை இணைய இதழும் பாராட்டி வாழ்த்துகிறது.

# கோவிலூர் மடாலயத்தின் நிருவாகத்தில் இயங்கும் நிறுவனங்கள்

# நாச்சியப்ப சுவாமிகள் பல் மருத்துவமனை






2017ம் ஆண்டு சீர் வளர் சீர் மெய்யப்ப சுவாமிகள் பல் மருத்துவமனை துவக்க எண்ணினார்கள். அதற்கு தேவையான உபகரணங்களை திருமதி விசாலாட்சி ஆச்சி நன்கொடையாக அளித்தார்கள்.

அப்போதிலிருந்து பல் மருத்துவர் திருமதி மோ.பிரியந்தி அவர்கள் இந்த மருத்துவ மனையை சிறப்பாக நிருவகித்து வருகிறார்கள்.

இந்த மருத்துவமனை பொருளீட்டும் நோக்கில் ஏற்படுத்தப்பட்டது இல்லை.

ஆகவே மிக குறைந்த கட்டணத்தில் எல்லா விதமான பல் சிகிச்சைகளும் செய்யப் படுகின்றன.

இந்த சேவையை பொதுமக்கள் பயன் படுத்திக்கொள்ள விரும்புகிறோம்.

பல் பராமரிப்பின் முக்கியத்துவத்தையும் அதனால் பெரும் நோய்களை எப்படித் தவிர்க்கலாம் என்பது குறித்தும் கல்வி நிறுவனங்களில் விழிப்புணர்வு நிகழ்ச்சிகள், மற்றும் பல் பரிசோதனை முகாம்கள் நடத்துவதற்கும், நம் கல்வி நிறுவனங்களின் தாளாளர் Dr மா.வீரப்பன் அவர்களை 9842209191 என்ற எண்ணில் தொடர்பு கொள்ளவும்.

தென்சபாநாயகர் கோவில் கட்டளைகளில் பங்கு கொள்ள விரும்புபவர்கள் 94433 35312 என்ற எண்ணை தொடர்பு கொள்ளவும்.



திருநெல்லை இணைய வழி திங்களிதழை பெற விரும்புபவர்கள் 94433 37011 என்ற எண்ணிற்கு வாட்சப்–பில் தொடர்பு கொள்ளவும்.



இணைய வழி தேவார இன்னிசை வகுப்பில் கலந்து கொள்ள விரும்புபவர்கள் 94433 35312 என்ற எண்ணை வாட்சப்–பில் தொடர்பு கொள்ளவும்.



திருநெல்லை இதழுக்கான ஆன்மிகப் படைப்புகள் வரவேற்கப்படுகிறன. திருநெல்லை (இணைய இதழ்), கோவிலூர் மடாலயம், கோவிலூர் என்ற முகவரிக்கு அஞ்சலிலோ அல்லது நேரிலோ தங்கள் ஆக்கங்களை அன்பர்கள் அளிக்கலாம்.



திருநெல்லை இணைய வழி மாத நாளிதழ் பற்றி தங்களுடைய மேலான கருத்துக்களை வாட்சப் எண். 94433 37011 மற்றும் koviloormadalayam@gmail.com என்ற மின்னஞ்சலுக்கு அனுப்பவும்.